ஒப்பந்த (அக்ரிமென்ட்) மனு எழுதவேண்டும் என்று இருக்கிறது. ஒப்பந்தம் எழுதுவதில் ஜில்லாவுக்கு ஜில்லா, கிராமத்திற்கு கிராமம் வித்தியாசப்படுகிறது. வட்டிக்குக் கொடுக்கிறவர்கள், திமிர் வட்டிக்குக் கொடுக்கக்கூடியவர்கள், எத்தனையோ விதமான ‘கண்டிஷன்கள்’ போடுகிறார்கள். உலகத்திலே இல்லாத நிபந்தனைகளையெல்லாம் போட்டு ஒப்பந்தம் எழுதி வாங்கிவிடுவார்கள். அந்த நிலை நீடித்தால் விவசாயிகள் பாதிக்கப்படக்கூடிய நிலைமை தான் ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். ஆகவே, இதற்கென்று ஒரு குறிப்பிட்ட முறை (பாரம்) நிர்ணயித்து, அதன் படிதான் எழுதி வாங்கவேண்டுமென்றிருப்பது நலம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அமைச்சர் அவர்களுக்கு கோவில்களையும், மடாதிபதிகளையும் பாதுகாப்பதற்குத் தீவிரமான ஆர்வம் உண்டு என்பது நம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். கல்யாணம் ஆகாத மடாதிபதிகளுக்கே இவ்வளவு நல்ல வாழ்க்கை நடத்த வசதி வேண்டுமென்னும்போது, மனைவி மக்களோடு இருக்கும் பரம ஏழை விவசாயிகளுடைய வாழ்க்கைத்தரம் எந்த அளவு இருக்கவேண்டும் என்பதிலே பெரிய அளவுக்கு கனம் அமைச்சர் அவர்கள் ஆர்வம் காட்டவேண்டும் என்று நான் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன். அப்படிப் பார்க்கும்போது, ஐந்து ஸ்டாண்டர்டு ஏக்கர் உச்சவரம்பு இருந்தாலபோதும் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். கல்வி சம்பந்தப்பட்ட வரையில், மத அடிப்படையிலே நடத்தப்படாமல், சர்க்காரே பள்ளிக்கூடங்களை எடுத்து நடத்தக்கூடிய நிலைமையை உண்டாக்கவேண்டும். இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார் என்று நினைக்கிறேன். ஒரு மாதத்திற்குள் விவசாயிகள் பணம் கட்ட முடியாத நிலையில் இருந்தால், அவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றாத அளவுக்கு அவர்களுக்கு உதவி புரியுமாறு சர்க்காரை நான் கேட்டுக்கொள்கிறேன். அந்த அடிப்படையில் இந்த மசோதாவில் திருத்தம் செய்யவேண்டுமென்றும் நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

*Sri M.S. SELVARAJAN கனம் தலைவர் அவர்களே, விவாதத்தில் இருக்கக்கூடிய மசோதா அரசாங்கத் தரப்பில் கொடுக்கப்பட்ட வாக்குறுதியைக் காப்பாற்றும் முகமாகக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. குறிப்பாக மிஷனரிகள் சில ஸ்தாபனங்களை நடத்தி வருகிறார்கள். பாடசாலை நிர்வகிப்பது, அனாதை விடுதிகள் நிர்வகிப்பது இவைகளுக்கான நிறுவனங்களில் இயல்பாகவே முழுச் சொத்தை அங்குள்ளவர்களே நேரடியான பராமரிப்பு செய்து வருகிறார்கள். ஒரு அனாதை விடுதி இருக்குமானால் அங்கிருக்கும் நூற்றுக்கணக்கான குழந்தைகள் முற்றிலும் சோம்பேறிகள் போல, யாருடைய உழைப்பிலோ சாப்பிட்டுக் கொண்டிருப்பது என்று மாத்திரம் இல்லாமல் சில ஸ்தாபனங்களில் அந்தக் குழந்தைகளுக்கெல்லாம் தகுந்த அளவிற்கு வேலை வாங்கி சாப்பாடு போடுகிறார்கள், கல்வி போதிக்கிறார்கள், தொழில் வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்கிறார்கள். அது போன்ற நிறுவனங்கள்கூட சிற்சில இடங்களில் இருக்கின்றன. நான்

7th December 1961] [Sri M. S. Selvarajan]

அறிந்தமட்டில், திருச்செந்தூர் தாலுகாவில், அடைக்கலபுரம் என்ற ஊர் இருக்கிறது. அங்கே ஒரு பெரிய அனாதை இல்லமிருக்கிறது. ஏறத்தாழ ஆயிரம் அனாதைக் குழந்தைகள் அங்கே பராமரிக்கப்படுகிறார்கள்—கத்தோலிக்க மிஷனரியால். அத்தகைய ஸ்தாபனத்திற்கு கிட்டத்தட்ட நூறு ஏக்கர் நிலம் இருக்கிறது. சாதாரண தரிசு நிலமாக, சாதாரண புஞ்சை நிலமாக இருந்ததை முற்றிலும் விருத்தி செய்து நஞ்சையாக மாற்றியிருக்கிறார்கள். மற்றவர்களுடைய உதவியே இல்லாமல், தங்களை அண்டிப் பிழைக்கும் குழந்தைகளை அத்தகைய ஸ்தாபனங்களின் பராமரிப்புக்கு உபயோகித்துக்கொண்டு வருகிறார்கள். இதுபோன்று நல்ல ஸ்தாபனங்கள்கூட இந்த மசோதா சட்டமாவதன்மூலம், விதிவிலக்குக்கு உட்பட்டதாக இல்லாமல் போய்விடலாம். ஆகவே, இதுபோன்ற நிறுவனங்கள் வேறு இடங்களில் இருந்தாலும், எத்தகைய ஸ்தாபனம் அதை நிர்வகித்து வந்தாலும்கூட, அவைகளையெல்லாம்கூடப் பார்த்து, பரிசீலனை செய்து அவை முற்றிலும் முறையான வழியில் நடந்து வருகின்றன என்ற எண்ணத்திற்கு அரசாங்கம் வருமானால், அது போன்ற நிறுவனங்களுக்கு விதிவிலக்குக் கொடுக்கும் அதிகாரம் அரசாங்கத்திற்குத் தேவை. அவைகளைகூட இன்றைக்கிருக்கும் சட்டப் பிரகாரம், இருபது ஏக்கருக்கு மேற்பட்ட நிலத்தைக் கொடுத்துத்தான் ஆகவேண்டும்.

(Deputy Speaker in the chair)

எங்கேனும் ஒருவருக்கு கட்டுக் குத்தகைக்கு கொடுத்தாக வேண்டும் அவர்கள் தயாராக இல்லாவிட்டால் தயார் செய்து, அத்தகைய கட்டுக் குத்தகைக்காரரைக் கண்டு ஒப்படைக்க வேண்டுமென்ற நிலைமை ஏற்படுமானால், யாருக்குக் கொடுப்பது? இத்தகைய சிரமங்களுக்கு அவர்கள் உட்படுவார்கள். இது போன்று அவசியந்தானா என்ற நிலைமை ஏற்படும். ஆகவே, இன்றைக்கு இருக்கக்கூடிய விதிவிலக்கு அளிக்கக்கூடிய அதிகாரங்கள் செக்ஷன் 52 மூலமாக அரசாங்கம் எடுத்துக் கொள்வது போதுமானவயாக இல்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த மசோதா வருவதன் மூலமாக மத ஸ்தாபனங்கள், தரும ஸ்தாபனங்கள் எல்லாம் நிச்சயமாகப் பலன் அனுபவிக்கப்போகின்றன. மத ஸ்தாபனங்களினுடைய வளர்ச்சியை விரும்புகிறவர்கள், அத்தகைய ஸ்தாபனங்கள் நல்ல விதமாக வரவேண்டும், வளரவேண்டும் என்று எண்ணக்கூடிய எல்லோரும் சந்தோஷப்படவேண்டியது தான். இது மத ஸ்தாபனங்களை, மடாதிபதிகளைப் பாதிக்கும் என்று யாரும் கவலை கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால், நான் அறிந்த மட்டில், சில தேவஸ்தானத்திற்குச் சொந்தமான பொது ட்ரஸ்ட்களைப் பராமரிப்பதே தேவஸ்தான நிர்வாகத்தினர் அல்லது ட்ரஸ்ட் பராமரிப்பாளர்களுக்கு முழு நேர வேலையாகி விடுகிறதே தவிர, எத்தகைய நோக்கத்தோடு இந்த நிறுவனங்களுக்கெல்லாம் தரும சொத்துக்கள் ஒப்படைக்கப்பட்டனவோ அத்தகைய நல்ல காரியங்கள்கூட நல்ல எண்ணம்கூட நிறைவேற முடியாத அளவு தடுமாடக்கூடிய • கஷ்டங்களுக்கு இவையெல்லாம் உட்பட்டு

விடுகின்றன. இதெல்லாம் இல்லாத அளவு சொற்ப அளவில் தங்களுடைய பொறுப்பை வைத்துக்கொள்ளக்கூடிய வகையில், ஒரு வரை யறைக்குள் 'மாக்ஸிமம் லிமிட்' அவசியம்தான். அதன் மூலமாக நிச்சயமான வருமானத்திற்கு அதிக ஸ்தாபனங்களுக்கு இடம் ஏற்பட்டுவிடுகிறது. குறிப்பாக, கூட்டுறவு முறையில் வளர்ச்சி பெறவேண்டும், கூட்டுறவு சங்கங்கள் எங்கெங்கே அமைக்க முடியுமோ அவைகளுக்கெல்லாம் அதிக ஊக்கம் கொடுக்க வேண்டும் என்பது இந்த மசோதாவின் மூலமாக நாம் தெரிந்து கொள்கிறோம். இது சட்டமாவதன் மூலமாக, பெரும்பாலன இடங்களில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் வளர்ச்சி அடைவதற்கும் இது ஏதுவாக இருக்கும். தரும ஸ்தாபனங்களுக்கும் தேவஸ்தானங்களுக்கும் நிச்சயமான ஒரு குறிப்பிட்ட அளவுக்கு வருமானம் நிலையாக வரும். அதைப் பராமரிக்கக்கூடிய சிரமங்கள் நிச்சயமாகக் குறையும். இந்த இரண்டுவித அனுகூலங்கள் நிச்சயமாக இருக்கின்றன. ஆகவே, தரும ஸ்தாபனங்களின்மீது மரியாதையும் மதிப்பும் வைத்திருக்கக்கூடியவர்களும் இதை வரவேற்க வேண்மே தவிர, எந்தவிதமான வருத்தமும் கொள்ளமாட்டார்கள்.

அதே நோக்கில் அனுதை விடுதிகளைப் போன்று சிறந்த முறையில் நடக்கும் நல்ல ஸ்தாபனங்களுக்கு, அவை எத்தகைய மிஷனரியாக இருந்தாலும் சரி, கிருத்துவ மிஷனரியாக இருந்தாலும் சரி மற்ற மதத்தினர்களுடைய மிஷனரியாக இருந்தாலும் சரி, அவர்கள் இன்றையதினம் ஏற்றுக்கொண்டிருக்கிற நல்ல பணிகளை எல்லாம் கவனித்து அவர்களுக்கு இந்த மசோதாவில் இருந்து விலக்கு அளிக்கத்தான் வேண்டும் என்று சர்க்கார் கருதினுலும்கூட இப்போது முடியாது. இந்தச் சட்டத்தின் மூலம் அரசாங்கத்தின் கை கட்டப்படுகிறது. முறையாக நடக்கக்கூடிய அத்தகைய ஸ்தாபனங்களுக்கு அரசாங்கம் ஒருக்கால் விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று நினைத்தால் அதற்கு அனுசரணையான அதிகாரத்தை இந்தச் சட்டத்திலேயே கோரிப்பெறவேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அதற்குரிய இடத்தில் அதற்குரிய அதிகாரத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

***SRI V. K. RAMASWAMY MUDALIYAR**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைப்பற்றி நான் என்னுடைய அபிப்பிராயங்களைப் பொறுக்குக் கமிட்டியில் விவரமாக எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஆகவே இப்போது அதிகமாகச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. என்னைப் பொறுத்தவரையில் ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். முக்கியமாகச் சாகுபடி செய்பவர்களை அப்புறப்படுத்தக்கூடாது. உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்ற நோக்கங்களை நான் ஒப்புக் கொள்கிறேன். தவிர தேவாலயங்கள் நல்லமுறையில் நடக்க வேண்டும். அப்படி இருக்கும்போது 20 ஏக்கர் சொந்த சாகுபடி என்றுல் சிக்கனமாக இருக்காது. இன்றைய தினம் விதைப்

7th December 1961]  [Sri V. K. Ramaswamy Mudaliyar)

பண்ணைகளுக்கு 25 ஏக்கர், 50 ஏக்கர் என்று இருக்கவேண்டும் என்பதை விவசாய இலாகாவும், கலெக்டரும் தீர்மானம் செய்திருக்கிறார்கள். அப்படி இருக்கிறபோது இந்த தேவாலயங்களுக்கு 20 ஏக்கர் என்று வைப்பது லாபகரமாக இருக்காது. நஷ்டம்தான் வரும். நானும் ஒரு விவசாயி என்ற முறையில் சொல்கிறேன். ஆகவே இதைக் கொஞ்சம் உயர்த்திக்கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சில கனம் அங்கத்தினர்கள் இந்தத் திருத்த மசோதாவை ஆதரித்துப் பேசினார்கள். வேறு சில கனம் அங்கத்தினர்கள் இதில் இருக்கிற குறைபாடுகளைத் தெரிவிக்கிறபோது முன்பு நாம் நிறைவேற்றியுள்ள உச்ச வரம்புச் சட்டம், இப்போது நாம் யோசிக்கின்ற இந்த மசோதா ஆகிய இந்த இரண்டின் அடிப்படைகளின் அவசியத்தை மனதில் கொள்ளாமல் குறைபாடுகளைத் தெரிவித்தார்கள் என்றுதான் சொல்லவேண்டும். முன்பு நிறைவேற்றப்பட்ட சட்டம் நிலம் சொந்தமாக வைத்துக் கொள்வதற்கு உச்ச வரம்பு நிர்ணயிப்பது. அதற்காக ஸ்டாண்டார்டு ஏக்கர் இவ்வளவு என்று வரம்பு கட்டினோம். கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள் இந்த மசோதாவை முதலில் நாம் தயாரித்த போது தர்ம ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலங்களுக்கு அதிக உச்ச வரம்பு போடுவது என்று போட்டோம். அதாவது 200 ஏக்கர் என்று போட்டோம். "அது அப்படியே இருக்கலாமே, விதிவிலக்குக் கொடுத்துவிட்டார்களே" என்று இப்போது சொல்கிறார்கள். இவ்வாறு கனம் அங்கத்தினர் தெரிவித்த அபிப்பிராயப்படி அந்த மசோதாவில் தர்மஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலத்தையும் சேர்த்து 200 ஏக்கர் என்று போட்டிருந்தால் 200 ஏக்கரா வரைக்கும் தர்மஸ்தாபனங்களுக்குச் சொந்தமாக இருக்கும். அதற்குமேல் மிச்சமாக இருக்கிற நிலங்களுக்கு நாம் நஷ்டஈடு கொடுக்கவேண்டும். நஷ்டஈடும் முன்பு இருந்த மசோதாவின்படி அதிகமாகும். ஏனென்றால் தர்மஸ்தாபனங்களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் வருமானம் எந்தவகையிலும் குறையக்கூடாது என்பதே அந்த மசோதாவின் அடிப்படை. அகையால் தஸ்திக் அலவென்சு கொடுப்பது என்றுகூடப் பேசினார்கள். அப்படிக்கொடுப்பது என்றால் அந்த தர்மஸ்தாபனங்களில் இருந்து நமக்கு வருமானம் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் பொதுமக்கள் கட்டுகிற வரிப்பணத்தில் இருந்து அதைக் கொடுக்கும்படியாக நேரிட்டிருக்கும். ஆகவே அந்த மசோதாவைவிட இந்த மசோதா எந்தவகையில் மோசமாகப் போய்விட்டது என்றுதான் எனக்குப் புரியவில்லை.

இப்போது சொந்தமாக 20 ஏக்கரா வரையில் சாகுபடிக்கு வைத்துக் கொள்ளலாம் என்று செய்திருக்கிறோம். சாகுபடி செய்துகொண்டிருக்கிற யாரையோ நிலத்தைவிட்டு அப்புறப்

படுத்திவிட்டு இதை எடுத்துக்கொள்ளப்போகிறார்கள் என்று இல்லை. அதைப்பற்றி கனம் சீனுவாச ஐயர் அவர்கள் சொன்னது சரி. இப்போது 500 ஏக்கரா, 200 ஏக்கரா என்று சொந்தச் சாகுபடியில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இனி 20 ஏக்கரா போக பாக்கியைக் குத்தகைக்கு 5 ஏக்கராவுக்கு மேல் போகாமல்விட வேண்டும். அவ்வளவு தான். 500 ஏக்கரா, 200 ஏக்கரா என்று சாகுபடி செய்துகொண்டிருப்பவர்களின் எண்ணிக்கையும்கூடக் குறைவு. அதுவும் சொந்தப்பண்ணை என்று வைத்துச் செய்வது குறைவு. அதுவும் 20 ஏக்கருக்கு மேல் வைத்திருக்கக்கூடியவர்களைப் பொறுத்துத்தான் இந்த மசோதா. ஆகவே நிலத்தைவிட்டு அப்புறப்படுத்துவது என்ற பிரச்சனை இதில் இல்லை. இரண்டாவது விதிவிலக்கைப்பற்றிச் சொன்னார்கள். அதுபற்றியும் ஒரு குழப்பம் சிலர் மனதில் இருப்பதாகத் தெரிகிறது. விதிவிலக்கு உச்சவரம்புச் சட்டத்திற்குப் போட்டோம். நிலம் சொந்தமாக வைத்திருப்பவர்களுக்காகப் போட்டோம். இப்போது குத்தகைக்கு விடுவது பற்றித்தான் பிரச்சனை. இந்த மசோதா முன்பு இருந்ததைவிட எந்தவகையிலும் மோசமாகப் போகவில்லை. உச்சவரம்பு மசோதாவில் ஹில் ஏரியா முழுவதற்கும் விலக்குக் கொடுத்திருக்கிறோம். இங்கே கொடுக்கவில்லை. அதில் கூட 5 ஏக்கராவுக்கு மேற்படாமல் குத்தகைக்கு விடலாம். உருளைக் கிழங்கு முதலியவற்றைப் பயிரிடலாம் காடுகள் என்றால்கூட அப்படிவிடலாம். மரமும் தான் நமக்கு வேண்டியிருக்கிறது. அதைப் போய் எப்படி குத்தகைக்கு விடுவது? குத்தகை விடுவது இந்த மசோதாவின் அடிப்படை. அதற்கு விதிவிலக்கு இதில் அளிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதி அனந்தநாயகி பேசுகிறபோது கூட்டுறவு சங்கம் எடுத்து நடத்துகிற 6-வது பிரிவைப்பற்றி பேசினார்கள். பத்து பேர் வந்து கூட்டுறவு சங்கம் வைத்து அதை எடுத்துக்கொள்வது என்றால் அப்புறப்படுத்தக்கூடாது என்று சொன்னார்கள், அப்புறப்படுத்தக்கூடாது என்ற சட்டம் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. பயிரிடுகிற எல்லா குத்தகைக்காரர்களுக்கும் அது பொருந்தும்.

இப்போது குத்தகைக்கு பயிரிடுகிறவர்கள் யாரையும் அப்புறப்படுத்த முடியாது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள காரணங்கள் இருந்தால் அன்றி, கூட்டுறவு சங்கம் வைக்க வேண்டும் அல்லது சொந்தமாக பயிரிடவேண்டுமென்று சொல்லி இருக்கிற டெனன்ட்ஸ்களை அப்புறப்படுத்த முடியாது. அதற்கு இடமில்லை. கூட்டுறவு சங்கம் வைத்துக் கொடுக்கலாம் அல்லது தனித்தனியாக கொடுக்கலாம் இருக்கும் நிலத்தை. கூட்டுறவு சங்கம் என்றவுடனே எதையோ பிரமாதமாக நினைத்துக்கொண்டு யார் பேரிலோ புகுத்தப் போகிறோம், அதனால் கெடுதல் வரப்போகிறதென்று சிலர் நினைக்கிறார்கள், எழுதுகிறார்கள். முதலில் பயம் ஏற்படுவதுண்டு, குழப்பம் ஏற்படுவதுண்டு. ஆனால் இப்பொழுது கிராம மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். தர்மஸ்தாபனங்களுக்கு சொந்தமான நிலத்தை கூட்டுறவு முறையில் சாகுபடி செய்ய இடமளிக்கப்

பட்டிருக்கிறது. இப்பொழுது 75 "டெனன்ட்ஸ் பார்மிங் கோவாப்பரேட்டிவ் சொசைட்டீஸ்" இருக்கின்றன. முக்கியமாக, தஞ்சாவூர், திருநெல்வேலி இன்னும் சில இடங்களில் இருக்கின்றன. அங்கு, நல்ல முறையில் சாகுபடி செய்யப்பட்டு வருகிறது. முதலில் இது எதற்கு என்று நினைத்தவர்கள், இப்பொழுது திருப்தியடைந்திருக்கிறார்கள். இதனால் பயிரிடுகிறவர்களுக்கும் பயன் இருக்கிறது, வசதி யிருக்கிறது. ஒரு பத்திரிகை எழுதியது, கூட்டுறவு சங்கங்களுக்கு எதற்காக நீங்கள் வசதி செய்து கொடுக்க வேண்டும், ஏன் சப்ஸிடி கொடுக்க வேண்டுமென்று. விவசாயம் செய்கிறவர்களுக்கு வசதி செய்து கொடுக்கிறோம், சொந்த நிலம் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கும் வசதி செய்து கொடுக்கிறோம், லட்சக்கணக்கில், கோடிக் கணக்கில் மூலதனம் போட்டு தொழில் நடத்துபவர்களுக்கும் வசதி செய்து கொடுக்கிறோம், அவர்களுக்கு மின்சாரம் குறைந்த கட்டணத்தில் கொடுக்கிறோம்—அவர்களுக்கும் வசதி செய்து கொடுக்கவில்லையா—ஆகவே கூட்டுறவு சங்கங்களை மட்டும் பெரிய எதிரிபோல் நினைப்பது விசித்திரமாகயிருக்கிறது. கூட்டுறவு என்றால் யார் பேரிலோ எதையோ பிடிவாதமாக அவர்கள் தலையில் சுமத்துவதாக சிலர் நினைக்கிறார்கள். அதில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்கு தெரியும் அதன் நன்மை. இதில் நிர்ப்பந்தம் எதுவுமில்லை. கூட்டுறவு சங்கம் உள்ள இடங்களில் விளைச்சல் அதிகமாகியிருக்கிறது. வசதி பெருகியிருக்கிறது. அரசாங்கத்தின் கருத்து விவசாயத்தைப் பெருக்கவேண்டுமென்பது. விளைச்சலை அதிகப்படுத்துவதுதான் முக்கியம் என்று சொன்னால் அக்கருத்தைக் கொண்டுதான் இப்பிரிவுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதுவரை சிலயிடங்களில் 300, 400 ஏக்கர் என்று சாகுபடி செய்கிறார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள் குறிப்பிட்டமாதிரி சிலயிடங்களில் லாபகரமாக நடக்கின்றன. அநேகயிடங்களில் லாபம் இல்லை. நஷ்டம்கூட வருகிறது. அதனால் தர்ம ஸ்தாபனங்களுக்குத்தான் நஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே, பயிரிடுகிற விவசாயியும் பயன் அடைய வேண்டும், அதனால் தர்ம ஸ்தாபனங்களுக்கும் நஷ்டம் ஏற்படக்கூடாது. பயிரிடுகிறவர்களும் சுரண்டப்படக்கூடாது இவைகளை யொட்டித்தான் பிரிவுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. முன்பிருந்ததுபோல் வரிப் பணத்திலிருந்து தஸ்திக் கொடுக்க வேண்டியதில்லை. பின்னர், விதிவிலக்கு பற்றி இங்கு பிரமாதமாக சொன்னார்கள். சொந்த சாகுபடி செய்வதற்கு விதி விலக்கு வேண்டியதன் நிமித்தம் இது போடப்பட்டிருக்கிறது. அதில் 10 ஏக்கரா, 20 ஏக்கரா என்ற பிரச்னை வந்தது. அவர்கள் இதற்காக வேண்டிய ஒரு எஸ்டாப்ளிஷ்மெண்ட் வைத்திருப்பார்கள். ஆகவே நஷ்டம் வரக்கூடாது. எனவே, மொத்தத்தில் 20 ஏக்கர் இருந்தால் போதும். அதற்கு மேல் வேண்டியதில்லை என்று தீர்மானிக்கப் பட்டது. குறைவாக உள்ளவர்கள் ஓரளவு பாதிக்கப்படுகிறார்கள். ஆக மொத்தத்தில் செலக்ட் கமிட்டி எல்லாவற்றையும் நன்கு

யோசித்துப் பார்த்து 20 ஏக்கர் என்று வைத்தால் எல்லோருக்கும் போதும் என்று நிர்மானிக்கப்பட்டது. ஏற்கனவே இருக்கிறவர்கள் பாதிக்கபடப் போவதில்லை. 200, 400 என்று வைத்திருந்தால் ஒரு ஆளுக்கு 5 ஏக்கர் என்று பிரித்துக் கொடுக்க முடியும். பின்னர், பேர் ரென்ட் பற்றி குறிப்பிட்டார்கள். இது இப்பொழுது அமுலில் இருக்கிறது. அதை மாற்றவில்லை. அதைக் குறைப்பது என்றால் அந்த அளவிற்கு தர்ம ஸ்தாபனங்களின் வருவாய் குறையும். பின்னர் நஷ்டயீடு கொடுக்க வேண்டி வரும். ஆகவே 40 என்றே போட்டிருக்கிறோம். மனதிலே ஒரு குழப்பம் இருப்பதால்தான் கொள்கை புறக்கணிக்கப்பட்டது என்று பேசினார்கள். ஸ்ரீ அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள், கூட்டுறவு முறை சரியாக நடக்கவில்லை என்று. தர்ம ஸ்தாபனங்களின் நிலத்தை சாகுபடி செய்யும் 75 கூட்டுறவு சங்கங்கள் திருப்தியாக நடக்கின்றன. விளைச்சல் அதிகப்பட்டிருக்கிறது. எங்கெங்கு முடியுமோ அங்கு வாலண்டரியாகச் செய்யலாம், இஷ்டப்பட்டால். அதற்கு வசதி செய்து கொடுப்பது என்ற வகையில் இச்சட்டம் இருக்கிறது. கடைசியாக பேசிய அங்கத்தினர் கனம் ஸ்ரீ செல்வராஜன் அவர்கள், கல்வி ஸ்தாபனங்கள், அனாதைக் குழந்தைகளை பராமரிக்கும் ஸ்தாபனங்கள், குழந்தைகளைக் கொண்டே நிலத்தைத் திருத்தி வைத்திருக்கிறார்கள், அப்படிப்பட்டவர்களுக்கு சலுகை—விலக்கு கொடுக்கவேண்டுமென்றார்கள். டெமான்ஸ்ட்ரேஷன் பர்பஸ்-க்கு நல்லபடி சாகுபடி செய்ய வேண்டியிருக்கும், மாணவர்களைக் கொண்டு சாகுபடி செய்ய வேண்டியிருக்கும், உயர்நிலைப் பள்ளியாகயிருந்தால் அவர்களே சாகுபடி செய்வதால் வருமானம் நன்கு வந்திருக்கும். அதை மாற்றினால் வருமானம் குறைந்து போகும். விலக்குக் கொடுப்பதை அரசாங்கம் பரிசிலனை செய்து கொடுக்கலாம் என்றிருக்கிறது. தேவை ஏற்பட்டால் அந்தத் தேவையை சமாளிப்பதற்கு இந்த மசோதாவில் இடமிருக்கிறது என்றுதான் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே, இந்தத் திருத்தப்பட்ட மசோதாவை இந்த மன்றம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961), as amended by the Select Committee, be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

DEPUTY SPEAKER : The question is :—

"That clause 2 do stand part of the Bill".

7th December 1961]

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

' In sub-clause (15), delete the words ' but does not . . . agricultural purposes.'

In sub-clause (25) *for* the words ' or of an educational nature ' substitute the words ' nature, undertaking by Government.'

In sub-clause (31), delete the words, ' alone or in association with.'

In sub-clause (28) *for* item (1) *substitute* the following :—

' (1) in any area in the State except the transferred territory—

(*a*) 0.75 acre of wet land assessed to land revenue at the rate of Rs. 15 and above per acre; or

(*b*) 1.00 acre of wet land assessed to land revenue at the rate of Rs. 10 and above but below Rs. 15 per acre; or

(*c*) 1.15 acre of wet land assessed to land revenue at the rate of Rs. 8 and above but below Rs. 10 per acre; or

(*d*) 1.25 acre of wet land assessed to land revenue at the rate of Rs. 6 and above but below Rs. 8 per acre; or

(*e*) 1.50 acres of wet land assessed to land revenue at the rate of Rs. 4 and above but below Rs. 6 per acre; or

(*f*) 1.6 acres of wet land assessed to land revenue below Rs. 4 per acre ; or

(*g* 1.6 acres of dry and assessed to land revenue at the rate of Rs. 2 and above; or

(*h*) 1.75 acres of dry land assessed to land revenue at the rate of Rs. 1·25 and below Rs. 2 per acre; or

(*i*) 2.0 acres of dry land assessed to land revenue below Rs. 1.52 per acre.''

DEPUTY SPEAKER : Who is seconding these amendments?

SRI N. MARUDACHALAM rose . . .

DEPUTY SPEAKER : The hon. Member should have seconded the amendments as soon as they were moved. The amendments moved now fall through for want of a seconder.

Clause 2 was put and carried.

Clauses 3 and 4 were put and carried.

*Clause* 5.

DEPUTY SPEAKER : The question is—

'' That clause 5 do stand part of the Bill.''

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" *For* sub-clause (1) *substitute the following* :—

' (1) Except as otherwise provided in this Act, no public trust shall personally cultivate land in excess of five standard acres.'

SRI N. MARUDACHALAM : Sir, I second the amendmen,

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

**SRI V. K. KOTHANDARAMAN** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே 5-வ துபிரிவிலே 20 ஸ்டாண்டேர்ட் ஏக்கர் என்றிருக்கிறது. ஏற்கெனவே 10 ஸ்டாண்டேர்ட் ஏக்கர் என்றிருப்பதை 5 ஸ்டாண்டேர்ட் ஏக்கர் என்ருக்கவேண்டும் என்பதற்கான காரணத்தை பொது விவாதத்தின்போது எடுத்துக் கூறினேம். இப்பொழுது, அதில் வருவாய் குறைந்து விட்டது என்பதற்காக வேண்டியோ அல்லது குறைந்துவிடும் என்பதற்காக வேண்டியோ 10 என்பதை 20 என்று ஆக்க வேண்டியது கிடையாது. ஏராளமான வருவாய் இருக்கிறது. பல குத்தகை சாகுபடியிலிருந்தும் வருமானம் கிடைக்கிறது. ஆக வருவாய் குறையக்கூடிய அளவு ஒரு நிலைமையும் கிடையாது. ஆகவே 20 ஸ்டான்டேர்ட் ஏக்கர் என்று இருக்கவேண்டிய அவசியமில்லை. 5 ஏக்கர் இருந்தால் போதும் என்ற அடிப்படையில்தான் இத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ஆகவே இதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் உதவி
1-0 p.m. சபாநாயகர் அவர்களே, நான் முன்பே விளக்கியிருக்கிறேன். ஏற்கெனவே சாகுபடி செய்தவர்களுக்குக் கொடுத்ததுதான்— புதிதாக ஒன்றும் எடுத்துக்கொள்ளவில்லை. குறைந்த பட்சம் 20 ஏக்கர் இருக்கவேண்டும் என்று பொறுக்குக் கமிட்டி போட்டிருக்கிறது. ஆகையால் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு நான் வருந்துகிறேன்.

The amendment was put and lost.

Clause 5 was put and carried.

DEPUTY SPEAKER : I think the House has no objection to sit for half an hour more and finish the rest of the business.

Clauses 6 to 12 were put and carried.

*Clause* 13.

DEPUTY SPEAKER : The question is—

' That clause 13 do stand part of the Bill.'

7th December 1961]

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following amendment :—

'Add the following proviso after sub-clause (2) (a) and make consequential changes.

"Provided that the persons to take on lease the land concerned after 15 days of the publication in the newspapers".'

SRI N. MARUDACHALAM : Sir, I second the amendment.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், 13-வது பிரிவிலே விவசாயம் செய்வதற்கு ஆட்கள் கிடைக்கவில்லையென்று சொன்னால் அதற்குப் பிறகு அவர்களே முடிவு செய்யவேண்டும், விவசாயம் செய்யவேண்டும் என்ற முறையிலே இருக்கிறது. நான் என்ன சொல்லுகிறேன் என்றால் வேண்டிய அளவுக்கு ஆட்கள் இருக்கிறார்களா இல்லையா என்று நிர்ணயம் செய்வதில் திட்ட வட்டம் ஏதுமில்லை. இந்தக் காரணத்தினால் 15 தினங்கள், தேவஸ் தானத்திற்குச் சொந்தமான நிலமாக இருந்தாலும், மடத்திற்குச் சொந்தமான நிலமாக இருந்தாலும், விவசாயம் செய்ய ஆட்கள் தேவை என்று விளம்பரம் செய்து பிறகு முடிவுக்கு வருவது நலமாக இருக்கும்—நேர்மையாக இருக்கும் என்ற அந்தத் திருத் தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதனை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே நிலத்தைப் பயிரிட குத்தகைதாரர்கள் வரவில்லையென்றால் முடிவை அவர்களே செய்வதில்லை—ப்ரிஸ்க் ரைப்ட் அத்தாரிட்டி செய்யவேண்டுமென்று இருக்கிறது. இதற்கெல்லாம் நியூஸ்பேப்பரில் விளம்பரம் செய்வதென்றால் செலவாகும். அப்படி இருக்கக்கூடிய நிலம் 5 ஏக்கருக்குள்ளாக இருக்கலாம். அதற்காக பத்திரிகைகளில் விளம்பரம் செய்வது அவசியமில்லை. அதனால் வீண் செலவுதான் ஆகும். ஆகையால் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாது.

The amendment was put and lost.

Clause 13 was put and carried.

Clauses 14 to 17 were put and carried.

*Clause* 18.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 18 do stand part of the Bill.'

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move the following amendment :—

'In clause 18, after the expression "section 7", insert the figures and brackets "15(2)".'

This is a verbal amendment.

The amendment was put and carried.

Clause 18 as amended was put and carried.

*Clause* 19.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 19 do stand part of the Bill.'

**Sri V. K. KOTHANDARAMAN** : Sir, I move the following amendment :—

'In sub-clause (1) (*a*) of Clause 19,, for the words 'a month after such date' substitute the words 'three months after such date'.'

Sri N. MARUDACHALAM : Sir, I second the amendment.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

**Sri V. K. KOTHANDARAMAN** : *கனம் உதவி சபாநாயகர் அவர்களே 19-வது பிரிவிலே ஒரு மாதத்திற்குள்ளாக என்று இருக்கிறது. இதை மூன்று மாதமாக அதிகரிக்கவேண்டும் என்று கருதி நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். காரணம் என்னவென்றால் கல்டிவேட்டிங் டெனென்ட்ஸ் ஒரு மாதத்திற்குள் கொடுக்கவேண்டிய கடன்களைக் கொடுக்க வேண்டும். அப்படி திருப்பிக்கொடுக்கவில்லையானால் அவர்களை வெளியேற்றவேண்டும். ஆகையால் மூன்று மாத தவணை கொடுத்து, அது வரையில் பார்த்து, திருப்பிக்கொடுக்க முடியாத நிலை ஏற்படுமானால் சர்க்காரே கொடுத்து நீண்டகால தவணையில் வசூல் செய்யும் அளவில் உதவிசெய்து விவசாயிகளை வெளியேற்றுவதைத் தடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.*

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : *கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு மாதம் தவணை போதாது, இன்னும் அதிகமாக இருக்கவேண்டுமென்று சொன்னால் அதைப் பற்றி யோசிக்கலாம். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.*

The amendment was put and lost.

Clause 19 was put and carried.

*Clause* 20.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 20 do stand part of the Bill.'

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Sir, I move the following amendment :—

'In clause 20, in sub-clause (1) and the proviso thereto, for the words 'two months', substitute the words 'six months.'

7th December 1961] [Sri M. Bhaktavatsalam]

The amendment was put and carried.

Clause 20 as amended was put and carried.

Clauses 21 to 23 were put and carried.

*Clause* 24.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 24 do stand part of the Bill.'

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following amendments :—

'In item (i) of sub-clause (1) for the figures 40' *substitute* the figures '30'.'

'In item (ii) of sub-clause (1) for the figures '35' *substitute* the figures '25'.

'In item (iii) of sub-clause (1) for the figures '33-1/3' substitute the figures '20'.'

SRI N. MARUDACHALAM : Sir, I second the amendment.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 24-வது பிரிவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தங்கள் அதாவது ஃலேபர் ரெண்ட் 40, 35, 33-1/3 என்ற முறையில் இருப்பதை 30, 25, 20-ஆக மாற்றிப் போடவேண்டுமென்று ஒரு திருத்தம். இன்றைக்குள்ள விலைவாசி அடிப்படையில், பல வருஷங்களுக்கு முன்னால் இயற்றப்பட்ட இந்த ஃபேர் ரெண்ட் இன்றைக்குப் பொருத்தமாக இல்லை. ஆகையால் விவசாயிகளுடைய நலனைக் கருதி இதைத் திருத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் முன்பே விளக்கியிருக்கிறேன். இந்தப் பிரிவிலே இப்போது இருக்கிற ஃபேர் ரெண்ட் ஆக்ட் அப்படியே சேர்க்கப்பட்டிருக்கிறது. விலைவாசியின் சாதக பாதகங்கள் குத்தகைதாரருக்கும் உண்டு, அதே மாதிரி நிலச்சொந்தக்காரர்களுக்கும் உண்டு. விலைவாசி அதிகமாக இருக்கிறது என்றால் 60 பங்கு பெறுகின்றவர்களுக்கும் அந்தப் பலன் உண்டு. மொத்தத்தில் தர்ம ஸ்தாபனங்களின் வருமானம் குறையக்கூடாது. இப்போது இருக்கிற ஃபேர் ரெண்ட் ஆக்டையேதான் இதிலே அமைத்திருக்கிறோம். ஆகையால் இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு நான் வருந்துகிறேன்.

The amendments were put and lost .

Clause 24 was put and carried.

Clauses 25 to 44 were put and carried.

*Clause* 45.

DEPUTY SPEAKER : The question is :—

' That clause 45 do stand part of the Bill.'

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move the following amendment :—

In sub-clause (2) after the words " belonging to any public trust " insert the word ' to '.

The amendment was put and carried.

Clause 45, as amended, was put and carried.

Clauses 46 to 62 were put and carried.

Schedule I was put and carried.

SCHEDULE II.

DEPUTY SPEAKER : The question is :—

" That Schedule II do stand part of the Bill."

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Registrar of Co-opearative Societies has furnished us with an up-to-date list. We shall incorporate the same in the Schedule.

I move the following amendment :—

' That for Schedule II, substitute the following Schedule, namely:—

*Schedule II.*

(*See* section 45.)

| *Serial number.* (1) | *Name of the Society.* (2) | *Name of the temple or institution.* (3) |
|---|---|---|
| | *Thanjavur district.* | |
| 1 | The Vakkaramari Tenants Co-operative Farming Society. | Sri Kambahareswarar Temple, Tirubuvanam, Kumbakonam taluk. |
| 2 | The Melaramansethi Tenants Co-operative Farming Society. | Do. |
| 3 | The Koilramapuram Tenants Co-operative Farming Society. | Sri Pasupathiswarar Temple, Pandanallur, Kumbakonam taluk. |
| 4 | The Araseri Tenants Co-operative Farming Society. | Do. |
| 5 | The Sirukadambur Tenants Co-operative Farming Society. | Do. |
| 6 | Sri Thiagesar Tenants Co-operative Farming Society. | Rajan Kattalai attached to Sri Thiagarajaswamy, Tiruvarur, Nagapattinam taluk. |
| | The Brahannayaki Ambal Tenants Co-operative Farming Society. | Sri Bavaoushadiswarar Poongul Temple, Thiruthuraipoondi taluk. |
| 8 | The Thillaiyadi Tenants Co-operative Farming Society. | Sri Saranatharaiharthaswamy, Thillayadi, Mayuram. |

7th December 1961] [Sri M. Bhaktavatsalam]

| *Serial number.* | *Name of the Society.* | *Name of the temple or institution.* |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| | *Thanjavur district—cont.* | |
| 9 | The Koilkadambanur Sri Kailasanatha swamy temple Tenants Co-operative Farming Society. | Sri Kailasanath swomy temple Koilkadambanur, Nagapattinam taluk. |
| 10 | Maingal Tenants Co-operative Farming Society. | Sri Manthrapuriswarar temple, Kovilur, Tiruthuraipoondi taluk. |
| 11 | The Valivalam Sri Hirudayakamalanathaswamy Koil Tenants Co-operative Farming Society. | Sri Hiruthayakamalanathaswamy Temple, Valivalam. |
| 12 | The Mariammankoil Inam Arulmoshipettai Tenants Co-operative Farming Society. | Sri Palace Devasthanam, Thanjavur town. |
| 13 | The Pulimangalam Tenants Co-operative Farming Society, | Sri PanchanathiswararTemple, Tiruvaiyaru. |
| 14 | Agniswarar Temple Tenants Co-operative Farming Society. | Sri Agniswar swamy temple, Tirupugalur, Nannilam taluk. |
| 15 | The Maruvathur Tenants Co-operative Farming Society. | Sri Vaidyanathaswamy temple, Vaithiswarankoil, Sirkali taluk. |
| 16 | The Kadiramangalam Tenants Co-operative Farming Society. | Do. |
| 17 | The Sikkil Navaneetheswaraswami (at Kothamangalam) Tenants Co-operative Farming Society. | Sri Navaneetheswareaswami, Sikkil, Nagapattinam taluk, |
| 18 | The Sikkil Navaneetheswaraswami (at Thethampet) Tenants Co-operative Farming Society. | Sri Navaneetheswaraswamy, Sikkil Nagapattinam taluk. |
| 19 | The Tiruchenkattankudi Tenants Co-operative Farming Society. | Sri Rudrapathiswarar temple, Tiruchengattankudi, Nannilam taluk. |
| 20 | The Thenur Tenants Co-operative Farming Society. | Sri Sattanathaswami temple, Sirkali taluk. |
| 21 | The Tiruvalandur Tenants Co-operative Farming Society, | Sri Parimalarenganathar temple, Tiruvilandur, Mayuram taluk. |
| 22 | The Tirunellikaval Sri Nellivananathaswami Devasthanam Tenants Farming Society. | Sri Nellivananathaswamy temple, Tirunellikaval, Mannargudi taluk. |
| 23 | The Thirunaraiyur Tenants Co-operative Farming Society | Sri Srinivasaperumal, Nachiyarkoil, Kumbakonam taluk. |
| 24 | Sri Amaruviperumal Devasthanam Tenants.Cooperative Farming Society. | Sri Amaruviperumal temple, Theralundur, Mayuram taluk. |
| 25 | The Vedanayagi Tenants Co-operative Farming Society. | Sri Vedaranyaswarar temple, Vedaranyam, Tiruthuraipoondi taluk. |
| 26 | The Pannirneer Mozhiyalpuram Tenants Co-operative Farming Society. | Do. |
| 27 | The Andergadu Tenants Co-operative Farming Society. | Do. |
| 28 | The Kunnalur Tenants Co-operative Farming Society. | Do. |
| 29 | The Kariapattinam Tenants Co-operative Farming Society. | Sri Kailasanagaram Chattiram Devasthanam, Vadaranyam. |

[Sri M. Bhaktavatsalam] [7th December 1961

| *Serial number* (1) | *Name of Society* (2) | *Name of the temple or institution* (3) |
|---|---|---|
| | *Thanjavur district—cont.* | |
| 30 | The Natchatramalai Tenants Co-operative Farming Society. | Sri Amirthakadeswarar temple, Tirukadayur, Mayuram taluk. |
| 31 | The Thirukkadayur Tenants Co-operative Farming Society, | Do. |
| 32 | The Vadarangam Tenants Co-operative Farming Society. | Sri Ranganathaperumal temple, Vadarangam, Sirkali taluk. |
| 33 | Senthanaramaswamy Tenants Co-operative Farming Society. | Sri Santhanaramaswamy temple, Needamangalam, Mannargudi taluk. |
| 34 | Thillaivilagam Tenants Co-operative Farming Society. | Sri Veera Kothandaramaswamy temple, Thillaivilagam. |
| 35 | The Kalukarainatham Tenants Co-operative Farming Society, | Sri Parimalaranganathaswamy temple, Thiruvilandur, Mayuram taluk. |
| 36 | The Sembiamahadevi Sri Kailasanathar Devasthanam Tenants Co-operative Farming Society. | Sri Kailasanathaswamy temple, Sembiamahadevi, Nagapattinam taluk. |
| 37 | The Ottagudi Tenants Co-operative Farming Society. | Sri Palace Devasthanam, Thanjavur. |
| 38 | The Sowrirajaperumal Tenants Co-operative Farming Society. | Sri Sowrirajaperumal, Thirukkannapuram, Nannilam taluk. |
| 39 | Sri Murugan Tenants Co-operative Farming Society, | Sri Subramaniaswamy temple, Ettikudi. |
| 40 | Sri Vedapuriswaraswami Devasthanam (at Kilayur) Tenants Co-operative Farming Society. | Sri Vedapuriswarar temple, Theeralundur, Mayuram taluk. |
| 41 | Muthupet Sri Sundareswarasami Devasthanam Pudkkottagam Tenants Co-operative Farming Society. | Sri Sundareswaraswamy temple, Muthupet, Tiruthuraipundi taluk. |
| 42 | The Thiruvoimoor Thiagarajaswami Devasthanam Tenants Co operative Farming Society, | Sri Thyagarajaperumal temple, Thiruvoimoor, Nagapattinam taluk. |
| 43 | The Nemmeli Tenants Co-operative Farming Society. | Sri Chokkanathaswamy temple, Mannargudi taluk. |
| 44 | The Pamini Tenants Co-operative Farming Society. | Sri Rajagopalaswamy temple, Mannargudi. |
| 45 | The Kannambadi Tenants Co-operative Farming Society. | Do. |
| 46 | The Kuruvadi village Tenants Co-operative Farming Society. | Do. |
| 47 | The Mattiyur Tenants Co-operative Farming Society. | Sri Arunachalaswamy temple, Tiruppanandal, Kumbakonam taluk. |
| 48 | The Thiruppanandal Tenants Co-operative Farming Society. | Do. |
| 49 | The Thiruvalaputhur Tenants Co-operative Farming Society. | Sri Rathinagiriswaraswamy temple, Thiruvalaputhur. |
| 50 | The Kuttalam Tenants Co-operative Farming Society. | Sri Ukthavediswarar temple, Kuttalam, Mayuram taluk. |
| 51 | The Saranathaswamy Temple Tenants Co-operative Farming Society. | Sri Saranathaperumal temple, Tirucherai, Kumbakonam taluk. |

7th December 1961] [Sri M. Bhaktavatsalam]

| *Serial number.* | *Name of the Society.* | *Name of the temple or Institution.* |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| | *Thanjavur district—cont.* | |
| 52 | The Poovanur Tenants Co-operative Farming Society. | Sri Sathuranga Vallabanatha swamy Devasthanam, Poovanur, Mannargudi taluk. |
| 53 | The Ariyalur Tenants Co-operative Farming Society. | Sri Koteeswarar Endowments, Thanjavur. |
| 54 | The Vilathur Sri Varadarajaperumal Tenants Co-operative Farming Society. | Sri Varadarajaperumal temple Vilathur. |
| 55 | The Tiruvarur Sri Thiagarajaswamy Devasthanam Arthajama Kattalai Mosakulam Tenants Co-operarive Farming Society. | Sri Thiagarajaswamy Devasthanan, Tiruvarur. |
| 56 | The Sattiakudi Sri Vedapuriswararswamy temple Tenants Co-operative Farming Society. | Sri Vedapuriswaraswamy temple, Sattiagudi, Nagapattinam taluk. |
| 57 | The Kallapuliyur Tenants Co-operative Farming Society. | Sri Parimala Renganathaswamy Devasthanam, Tiruvilandur, Kumbakonam taluk. |
| 58 | Sri Thiyagarajaswami Abishegakattalai Thirupallimukudal Tenants Co-operative Farming Society. | Sri Thiagarajaswamy Devasthanam, Tiruvarur. |
| 59 | The Kizhvelur Sri Akshayalingaswami Devasthanam, Tenants Co-operative Farming Society. | Sri Akshayalingasvami Devasthanam, Kizhvelur. |
| 60 | The Nattiruppu Tenants Co-operative Farming Society. | Sri Thiagarajaswamy Devasthanam of Dharmapuram Mutt (Thirukkuvalai). |
| 61 | The Keelaiyur Sri Renganathan Perumal Sri Arunachaleswaraswami Devasthanam Tenants Co-operative Farming Society. | Sri Renganathaperumal Devasthanam, Keelaiyur and Sri Arunachalaswamy Devasthanam, Keelaiyur. |
| 62 | The Thevur Devapuriswaraswami Tenants Co-operative Farming Society. | Sri Thevur Devapuriswarar Devasthanam, Thevur. |
| 63 | Sri Kalahastheeswaraswami Tenants Co-operative Farming Society. | Sri Kalahastheeswaraswami Devasthanam, Papanasam Taluk. |
| 64 | The Uthamadani Sri Srinivasaperumal Tenants Co-operative Farming Society. | Sri Srinivasaperumal Devasthanam, Uthamadani. |
| 65 | The Sembanarkoil Swarnapureeswaraswami Tenants Co-operative Farming Society. | Sri Swarnapureeswaraswami Devasthanam, Sembanarkoil. |
| 66 | The Kallikudi Tenants Co-operative Farming Society. | Rajankattalai attached to Sri Thiagarajaswami Devasthanam Tiruvarur. |
| 67 | The Thirumaraikadar Tenants Co-operative Farming Society. | Vedaranyeswarar temple, Vedaranyam. |
| 68 | The Thirukannankudi Sri Damodara Narayanaperumal temple Tenants Co-operative Farming Society. | Sri Damodaranarayanaperumal Devasthanam, Tirukannankudi. |
| 69 | Mayileripuram Tenants Co-operative Farming Society. | Sri Kalandeeswaraswami Devasthanam, Kottur. |
| 70 | The Thirukkannanmangai Tenants Co-operative Farming Society. | Sri Bakthavatchalaperumal Devasthanam, Thirukkanan-mangai. |

| *Serial Number.* | *Name of the Society.* | *Name of the temple or institution.* |
|---|---|---|
| | *Tirunelveli district.* | |
| 71 | The Chintamaniperi Tenants Co-operative Farming Society. | Sri Sankaranarayanaswami Devasthanam, Sankarankoil and Sri Chintamaninathaswamy temple, Vasudevanallur, Sankarankoil Taluk. |
| 72 | Sri Narambunathaswamy Tenants Co-operative Farming Society. | Sri Narambunathaswami Temple Thirupudaimaruthur, Ambasamudram taluk. |
| 73 | The Sivagiri Tenants Co-operative Farming Society. | Sri R.K. Nachiar Endowments, Sivagiri, Sankarankoil taluk |
| 74 | The Varadarajaswamy Tenants Co-operative Farming Society. | Sri Varadarajaswamy Devasthanam, Melaveeraraghavapuram, Tirunelveli Junction. |
| 75 | Sri Thirukkuthalanathaswamy Tenants Co-operative Farming Society. | Sri Thirukkuthalanathaswamy Devasthanam, Courtalam. |
| 76 | The Puliarai Tenants Co-operative Farming Society. | Sri Thirumalaikumaraswamy Devasthanam, Panpoli. |
| 77 | Sri Sankaranarayanaswamy Tenants Co-operative Farming Society. | Sri Sankaranarayanswamy Devasthanam, Sankarankoil. |
| | *Ramanathapuram district.* | |
| 78 | The Devadhanam Tenants Co-operative Farming Society. | Sri Nachadai Thavirtharulia swamy Devasthanam, Devadhanam. |
| 79 | The Devadhanam Ammaiyappa Tenants Co-operative Farming Society. | Do. |
| 80 | The Panaukulam Tenants Co-operative Farming Society. | Do. |
| | *Chingleput district.* | |
| 81 | Kovur Tenants Co-operative Farming Society. | Sri Sundharaswaraswamy Devasthanam, Kovur. |

The amendment was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) as amended be passed.

DEPUTY SPEAKER : Motion moved :—

"That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) as amended be passed."

*** SRI A. GOVINDASAMY :** தலைவர் அவர்களே, இந்த மசோதா நிறைவேறுகின்ற நேரத்தில் அமைச்சர் அவர்கள் நல்லெண்ணத்தை தெரிவிக்கின்ற வகையில், குடியானவர்கள் ஒரு மாத கெடுவிற்குள் குத்தகை கொடுக்கத் தவறினால் அவர்களை நிலத்திலிருந்து வெளியேற்றுவது என்ற நிலைமையைத் தவிர்க்கின்ற முறையில், இரண்டு மாத கெடுவாக அமைச்சர் அவர்கள்

7th December 1961] [Sri A. Govindasamy]

ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். அமைச்சர் அவர்களே இந்த இரண்டு மாத கெடுவிற்கு சம்மதம் தெரிவித்திருக்கிறார்கள். இந்த ஒரு சலுகையையாவது கொடுக்கவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN :** ஸார், அவசர அவசரமாக இந்த மசோதா நிறைவேறுகிறது. ஒரு பக்கத்திலே பசி. மற்றொரு பக்கத்திலே சீக்கிரத்திலே நிறைவேற்றிவிட்டுப் போக வேண்டுமென்பது. இப்படி நிறைவேற்றுகின்றபோது, பிரதானமாக எதையும் கவனிக்க முடியாவிட்டாலும் ஒன்றே ஒன்றை மட்டும் இந்த நேரத்திலே குறிப்பிடவிரும்புகிறேன். மத அடிப்படையிலே கல்வி பாடாசாலைகள் நடத்தப்பட்டு வருகிறது. இந்த பாடசாலைகள் விஷயத்திலே உண்மையிலேயே நமது சர்க்கார் சரியான கவனம் செலுத்தவில்லை யென்றும், அதற்கு மாறாக மறைமுகமாக ஆதரவாக இருக்கின்றார்கள் என்பதும் திட்டவட்டமாகச் சொல்ல முடியும். ஏற்கனவே மத அடிப்படையிலே பல பாடசாலைகள் நடக்கின்றன. இன்னும் இதைப்போல் ஆஸ்பத்திரிகள் நடக்கின்றன. இது எந்த அளவுக்கு இன்றையத் தினம் மிக மோசமான நிலைமையில் இருக்கிறது என்பது நமக்குத் தெரியும். இந்த அடிப்படையிலே தேசிய ஒருமைப்பாட்டுக்கு முட்டுக்கட்டையாக இது எவ்வளவு தூரம் இருக்கிறது என்பது நம் எல்லோருக்கும் தெட்டத் தெளிந்த விஷயம். ஆகவே, இன்றைக்கு சட்டத்தை நிறைவேற்றுவது பெரிதல்ல. பத்து ஏக்கர் நிலத்தை 20 ஸ்டாண்டர்டு ஏக்கராக எடுத்துக்கொள்ளுங்கள் அதே போல் இன்னும் பல விதிவிலக்குகள் கொடுங்கள்; வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் கல்வி விஷயத்திலே மட்டும் மதத்தைப் புகுத்த வேண்டாம்.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர் சம்பந்தமில்லாததைப் பேசக்கூடாது.

**Sri V. K. KOTHANDARAMAN :** சம்பந்தமில்லாததைப் பேசவில்லை. இதிலே கல்வி, மதம் எல்லாம் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆகவே, அதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். கல்வியை மத அடிப்படையிலே நடத்தவேண்டாமென்றுதான் கூறுகிறேன் அதற்காக, இராமாயணத்தையோ, பாரதத்தையோ நான் உதாரணம் காட்டவில்லை.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர் விஷயத்தை சுருக்கமாகச் சொல்லவேண்டும்.

**Sri V. K. KOTHANDARAMAN :** ஆகவேதான் இந்த கல்வி விஷயத்திலே சர்க்கார் முழு பொறுப்பு எடுத்துக்கொண்டு நடத்த வேண்டும், அதிலே கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படி இல்லாவிட்டால், தேசிய ஒருமைப்பாட்டுக்கு முட்டுக் கட்டையாக இது இருக்கும். ஆகவே, கண்டிப்பாக இதை சர்க்கார் எடுத்து நடத்த வேண்டுமென்று மீண்டும் இந்தச் சமயத்திலே தாழ்மையாக தெரிவித்துக் கொள்கிறேன்.

[7th December 1961

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM**: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவை சட்டமாக்குவதிலே அவசரம் ஒன்றுமில்லை. இந்த சபையிலுள்ள அங்கத்தினர்கள் தெரிவித்த கருத்தின்படி, இது பொறுக்குக் கமிட்டிக்கு விடப் பட்டு, ஒரு நாளைக்கு மூன்று நாட்கள் இருந்து பரிசிலனை செய்து, அவர்கள் சிபார்சை அனுப்பியிருக்கிறார்கள். இப்போது 1-½ மணி ஆகியும், "பசி வந்திட பத்தும் பறந்து போகும்" என்று கூட இல்லாமல், இதை ஆர அமர இருந்து சற்று அதிக நேரம் எடுத்துக்கொண்டு நிறைவேற்ற இவ்வளவு நேரம் எடுத்துக் கொண்டு கனம் அங்கத்தினர் அவர்கள் பேசியதிலிருந்தே, இது ஒன்றும் அவசரமில்லை என்பது விளங்கும். இதிலே யாருக்கும் எவ்வித அவசரமும் இல்லை. ஆனால், முன்பு உச்ச வரம்பு சட்டம் இந்த சபையிலே வந்த நேரத்திலே, எதிர்க்கட்சி அங்கத்தினர் கள் கேட்டார்கள். தர்ம ஸ்தாபனத்திற்காக தனியாக ஒரு சட்டம் எப்படி சாகுபடி செய்யவேண்டுமென்பதையெல்லாம் விளக்கும் வகையிலே வரப்போகிறது என்றெல்லாம் கேட்டார் கள். சிலர் பின்னாலே வருமென்று சொன்னார்கள். ஆனால் நாங்கள் சொன்னோம். இதை பின்னாலே என்று நாங்கள் விடப்போவ தில்லை. இப்போதே, நாங்கள் இருக்கும்போது நிறைவேற்றி விடப் போகிறோம் என்று சொன்னோம். அதற்கு ஏற்றவாறு இவ்வளவு குறுகிய காலத்திலே, மிகச் சிறந்த முறையிலே இதைத் தயாரித்த இலாகாவினரை நாம் பெரிதும் பாராட்ட வேண்டும். இவ்வளவு சிக்கிரத்திலே இதை நிறைவேற்ற அவர்கள் மிகவும் ஒத்துழைத்தார்கள். இந்தச் சட்டத்தில் ஒன்றும் குறையில்லை. குத்தகைகாரர்களுக்கு பாதுகாப்பு கொடுப்பதுதான் இந்தச் சட்டம் அதேமாதிரி தர்மஸ்தாபனங்களும் நடக்க வேண்டும் சிலர் பிடிக்கவில்லை என்று வேண்டுமானால் சொல்லலாம். யாரோ நிலம் கொடுத்தார்கள். அப்படி கொடுக்கப்பட்ட நிலம் சரியாக சாகுபடி செய்யப்படுகிறதா என்பதைப் பார்க்க வேண்டும். அப்படி கொடுக்கப்பட்ட நிலங்கள் சாகுபடி ஆகவேண்டும். அப்படி சரியாக சாகுபடி செய்யப்பட்டால்தான் உற்பத்தியைப் பெருக்க முடியும். ஆகவே, இதிலே அரசாங்கத்திற்கு அக்கறை இருக்கிறது. ஆகவே, அந்த வகையிலே இந்த மசோதா தெளி வாக திருத்தப்பட வேண்டும். அதே வகையிலேதான் இந்த மன்றத்திலே நிறைவேற்றப்பட்டிருக்கிறது. ஏதோ கனம் அங்கத் தினர் இதற்கு சம்பந்தமில்லாத கல்வி ஸ்தாபனத்தையும், வைத்திய ஸ்தாபனத்தையும் மனதில் வைத்துக்கொண்டு, ஏதோ மதம் என்று சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவர்கள் மனதிலே ஏதோ ஒரு குழப்பம் இருக்கிறது. எந்தச் சட்டமாக இருந்தாலும், அவர்கள் நிலத்தை வைத்துக்கொண்டு ஒழுங்காக சாகுபடி செய்கிறார்களா என்று பார்க்க வேண்டியது அவசியம். அதே சமயத்தில் குத்தகைதாரர்களும் சுரண்டப்படக் கூடாது. அதனால் வருமானமும் பாதிக்கப்படக் கூடாது. அதையெல்லாம் சரியாக பரிபாலனம் செய்யவேண்டும். அந்த நோக்கங்களைக் கொண்டுதான் இந்த சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ கோவிந்தசாமி அவர்கள், ஒரு திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று சொன்னார்கள். திருத்தம் கொடுத்திருந்தால் ஏற்றுக் கொள்ளலாம். அப்படி ஒன்றும் கொடுக்கவில்லை. ஒரு மாதத்திற்கு பதில் இரண்டு மாதம் என்று இருந்தால்கூட ஆட்சேபணை இல்லையென்று சொன்னேன். ஆனால் ஒரு மாதம் என்றிருப்பதே போதும். பாக்கியை யெல்லாம் எப்போதும் கொடுக்க வேண்டும். கடைசியில் கொடுக்கலாம், இன்னும் 3, 4 மாதங்கள் கழித்துக் கொடுக்கலாம் என்று குத்தகைதாரர்கள் சொல்வது சரியல்ல. அறுவடையானவுடன் கொடுக்க வேண்டும். இதிலே அக்கறை காட்ட வேண்டும். இல்லாவிட்டால், பிறகு கொடுக்கலாம் என்று இருந்துவிட்டால், அது குத்தகைதாரருக்கு பின்னால் பாதகமாகப் போகும். ஆகவே, ஒரு மாதம் என்று இருப்பதே போதும். இந்த மசோதாவை நிறைவேற்றுவதிலே ஒத்துழைத்த கனம் அங்கத்தினர்கள் அனைவருக்கும் என் நன்றியையும், பாராட்டுதலையும் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Public Trusts (Regulation of Administration of Agricultural Lands) Bill, 1961 (L.A. Bill No. 47 of 1961) as amended be passed.'

The motion was put and carried and the Bill as amended was passed.

(3) THE MADRAS GIFT GOODS (UNLAWFUL POSSESSION) BILL, 1961, (L.A. BILL NO. 52 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I rise to move—

'That the Madras Gift Goods (Unlawful Possession) Bill, 1961 (L.A. Bill No. 52 of 1961) be taken into consideration.'

Hon. Members are aware that voluntary international organisations like the CARE, UNICEF, etc., have been supplying substantial quantities of milk powder and other commodities for distribution to school children, maternity and child welfare centres, hospitals, etc. Recently the CARE organization of America have very generously come forward to supply 18.75 million pounds of rice. 6.25 million pounds of milk powder, 3 million pounds of corn-meal and 3 million pounds of vegetable cooking oil for distribution to children in primary schools through School Meal Programme which is being implemented in our State. The value of these commodities is of the order of Rs. 3 crores.

It is the anxiety of our Government no less than that of the donors that these commodities should reach the children and other needy persons for whom they are intended and that there should be no leakage of any kind at any point in that process. We have now had experience of three months in distributing the milk powder received from the CARE organisation and the House will be glad to hear that the programme has been proceeding smoothly and